ஆண்டாள் அடுத்த ப்ரபந்தமாகிய நாச்சியார் திருமொழியில் *கொல்லையரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார் சொல்லும் பொய்யானால், நானும்பிறந்தமை பொய்யன்றே* என்ற பாசுரத்திலும், * நல்லவென் தோழி! நாகணைமிசை நம்பரர், செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம் செய்வதென், வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை, வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமே * என்ற பாசுரத்திலும் உபாயங்களில் தலையான உபாயமாகிய ஆசார்யாபிமானத்திலேயே தனக்கு நிஷ்டையுள்ளதென்பதை ஸ்பஷ்டமாகக் கூறியிருக்கையாலே * நாங்களும் மார்கழி நீராட * என்பதற்கும் * மார்கழித் திங்கள் நீராடப் போதுவீர் * என்றதற்கும் இதுவே உள்ளுறை பொருளாகும். மேலே யெடுத்துக் காட்டிய ஆண்டாள் பாசுரங்களில் முக்கிய பாசுரத்தில் * நானும் பிறந்தமை பொய்யன்றே * என்றதன் உட்கருத்தைப் பெரியார் பக்கல் பணிந்து கேட்டறிவது. ... ... ... *

---

ஸ்ரீ:

# யதிராஜ ஸப்ததியும் எம்பெருமானாரும்

---

ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த யதிராஜ ஸப்ததியில் முதல் ஒன்பது ச்லோகங்கள் குருபரம்பரானுபவத்தில் சென்றன. 1. பெரிய பெருமாள், 2. பெரிய பிராட்டியார், 3. ஸேனை முதலியார், 4 நம்மாழ்வார், 5. ஸ்ரீமந்நாதமுனிகள், 6. உய்யக்கொண்டார், 7. மணக்கால் நம்பி, 8. ஆளவந்தார், 9. பெரியநம்பி.— ஆக, இப்படி குருபரம்பரானுபவம் செய்து தலைக்கட்டிய பின * ப்ரணமாம லக்ஷ்மணமுநி: * என்கிற ச்லோகம் முதலாக எம்பெருமானாருடைய குணானுபவத்திலே இறங்கியுள்ளார். மேற்குறித்த ஆரம்ப ச்லோகத்தில் லக்ஷ்மணமுநி: என்று ஸ்வாமியின் திருநாமத்தை வ்யபதேசித்தபடியினால், ஸ்வாமிக்கு அமைந்த ராமாநுஜர் என்னும் திருநாமம், தசரதாத்மஜனான ஸ்ரீராமனுடைய தம்பியாகிய இளைய பெருமாளைக் குறிக்கொண்டதாமென்று விளக்கப்பட்டதாயிற்று. ராமாநுஜனென்கிற திருநாமம், 'செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா!' என்னப்பட்ட நம்பிமூத்தபிரானென்னும் பலராமனுடைய தம்பியான கண்ணனையும் சொல்லக்கடவதென்பது முகுந்தமாலையில் * ஸ்ரீராமாநுஜ ஹே ஜகத்த்ரயகுரோ ஹே புண்டரீகாக்ஷ * என்கிற ஸம்போதநத்தையான ச்லோகத்தினால் அனைவரும் அறிந்ததேயாம். ஆகவே ஸ்வாமிக்கு அமைந்த ராமாநுஜனென்னும் திருநாமம் கண்ணபிரானைக் குறிக்கொண்டதாகவும் கொள்வதற்கு இடமிருப்பதால், கண்ணபிரானுக்கும் ஸ்ரீ ராமாநுஜர்க்கு முள்ள ஒற்றுமையை முன்பொரு வ்யாஸத்தில் நாம் பதினாறு வகையாக விவரித்து நிரூபித்திருக்கின்றோம். அது, சரித்ரப்போக்கில் உள்ளுறை பொருள்வகை யென்கிற ஸ்வாபதேசார்த்த முறையில் நிரூபிக்கப்பட்ட ஸாம்யம். வேதாந்த தேசிகன் யதிராஜ ஸப்ததியில் ஒரு ச்லேஷ வகையினால் நிரூபித்தருளின ஸாம்யம் இன்று விவரிக்கப்படுகிறது. அந்த ச்லோகம் வருமாறு:—

" ஸம்ஸ்தோதய சங்கராதி கர்வ: ஸ்வபலாத் உத்த்ருதயாதவப்ரகாச: ।
அவரோபிதவாந் ச்ருதேரபார்த்தாந் நநு ராமாவரஜஸ் ஸ ஏஷ பூய: ॥"

இந்த ச்லோகத்தில் மூன்று வகைகளிலும் கண்ணபிரானுக்கும் எம்பெருமானார்க்கும் ஸாம்யம், வடமொழி வல்லார்க்கு மிகவும் ரஸிக்கக்கூடிய ச்லேஷாலங்கார மர்யாதையினால் [இரட்டை பணியின்] அருளிச்செய்யப்பட்டுள்ளது. பல பொருள்படச் சொல்லு

வது ச்லேஷம் [சிலேடை] எனப்படும். அது அபங்க ச்லேஷ மென்றும் ஸபங்க ச்லேஷ மென்றும் இருவகைப்படும். பதங்களை யொடிக்குப் பொருள்கொள்ள வேண்டாமல் நானார்த்த பதங்களைவிட்டுப் பல பொருள்களைப் பெறுவிப்பதானது அபங்க ச்லேஷ மெனப்படும். அப்படியல்லாமல், பதங்களை யொடித்துப் பல பொருள்கொள்ளுமாறு ப்ரயோகம் செய்வதானது ஸபங்க ச்லேஷ மெனப்படும். இப்போது எடுத்துக்கொண்ட * சமிதோதய * என்னும் யதிராஜ ஸப்ததி ச்லோகத்தின் முதலிரண்டு பாதங்களில் அபங்க ச்லேஷம்; மூன்றாவது பாதத்தில் மாத்ரம் ஸபங்க ச்லேஷம்.

இனி, ச்லோகத்தின் கருத்து விவரிக்கப்படுகிறது.

## [1. சமிதோதய சங்கராதி கர்வ:]

இது கண்ணனுக்கும் உடையவர்க்கும் பொதுவான விசேஷணம். 'சங்கரன் முதலானோருடைய செருக்கை யடக்கினவர்' என்பது இதன் பொருள். கண்ணபிரான் பரமாகப் பொருள் கொள்ளும்போது சங்கரன் என்பதற்குச் சிவபிரானென்று அர்த்தம். ஆதி பதத்தினால் அப்பிரானைச் சேர்ந்த கார்த்திகையான் கரிமுகத்தான் முதலானோரை [ஸுப்ரஹ்மண்ய விநாயகாதிகளைக்] கொள்வது. கண்ணபிரான் பாணாஸுர யுத்தத்தில் சங்கரன் முதலானோருடைய செருக்கை யடக்கினது இதிஹாஸ புராண ப்ரஸித்தம். உடையவர் * சங்கர பாஸ்கர யாதவ பாட்ட ப்ரபாகரர் தங்கள் மதம் சாய்வுற * என்றும் * கா சங்கா சங்கராதே: * என்றும் சொல்லுகிறபடியே, சங்கரகுரு ப்ரப்ருதிகளான புறமதத்தவர்களின் செருக்கைப் போக்கினவர் என்பது சரித்ர ப்ரஸித்தம். ஆகவே இந்த விசேஷணம் கண்ணனுக்கும் உடையவர்க்கும் ஸாம்யத்தை நிரூபித்ததாயிற்று.

கண்ணபிரான் சங்கராதிகளின் செருக்கை யடக்கின வரலாறு இங்குச் சுருங்க வெழுதப்படுகின்றது. பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்த பாணாஸுர னென்பான் ஒரு கால் நடராஜனான சிவபெருமானுடைய நடனத்திற்குப் பொருத்தமாகத் தாளம் போட்டனன்; அதனால் மிக்க மகிழ்ச்சிகொண்ட சிவபெருமான் அந்த ஸந்தோஷாதிசயத்தினால் அந்தப் பாணாஸுரனுக்கு ஆயிரம் கைகளை வரப்ரஸாதமாகத் தந்து, தானும் தன் பரிவாரங்களும் அவனது பட்டணத்தைக் காவல் செய்துகொண்டிருக்கும்படியான அநுக்ரஹமும் செய்தருளினன். அந்தப் பாணாஸுரனுக்கு உஷையென்று ஒரு மகள் இருந்தாள். அவள் ஒரு நாள் ஒரு பராக்ரமசாலியான புருஷனோடு தான் கூடியிருந்ததாகக் கனாக் கண்டு, தன் உயிர்த்தோழியான சித்ரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்தாள். அவள் உலகி லுள்ள பல ஸுந்தர புருஷர்களின் வடிவங்களைச் சித்ரத்தில் எழுதிக் காட்ட, க்ருஷ்ண னுடைய பௌத்ரனும் ப்ரத்யும்நனது புத்ரனுமாகிய அநிருத்தனை தன்னோடு கூடியிருந்த னாக உஷை சுட்டிக்காட்டி, அவனைப் பெறுவதற்கு உபாயஞ் செய்யவேண்டுமென்று அத்தோழியை வேண்டினாள். அவள் தன் யோகவித்தையின் மஹிமையினால் த்வாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டுவந்து அந்தப்புரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை யநுபவித்து வந்தாள். இச்செய்தியைக் காவலாளரா லறிந்த அந்தப் பாணன் தன் சேனையுடன் அநிருத்தனை யெதிர்த்து மாயையினால் பொருது நாகாஸ்த்ரத்தினால் கட்டிப் போட்டிருந்தான். த்வாரகையிலே அநிருத்தனைக் காணாமல் யாதவர்களெல்லாரும் கலங்கி யிருந்தபோது, நாரத முனிவனால் செய்தியுணரப்பெற்ற ஸ்ரீ க்ருஷ்ண பகவான், கருடாரூட னாய்ப் பலராமன் முதலானோரோடு கூட பாணபுரமாகிய சோணிதபுரத்திற் கெழுந்தருளும் போதே, அங்கு அருகில் காவல் காத்துக்கொண்டிருந்த சிவபிரானது ப்ரமத கணங்கள்

எதிர்த்துவர, அவர்களை வெல்ல ஒழித்து, பின்பு சிவபெருமானால் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்று கால்களும் மூன்று தலைகளுமுள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற்றும் பொருட்டுப் போர்புரிய, அதனையும் துரத்தி, பாணாஸுரனது கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்த சிவபிரானது அநுசரர்களான அக்நிதேவர்கள் ஐவரையும் நாசஞ்செய்து, பாணாஸுரனோடு போர்செய்யத் தொடங்குகையில், அவனுக்குப் பக்கபலமாகச் சிவபெருமானும் ஷண்முகன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப் போராட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்த்ரத்தை ப்ரயோகித்துச் சிவன் ஒன்றுஞ் செய்யமாட்டாமல் கொட்டாவி விட்டுக்கொண்டு சோர்வடைந்து போம்படி செய்து, ஷண்முகனையும் கணபதியையும் ஹுங்காரங்களால் ஒதுங்க ஓட்டி, பின்னர் சக்ராயுதத்தை யெடுத்து ப்ரயோகித்து அப்பாணனது ஆயிரந் தோள்களையும் தாரை தாரையாய் உதிரம் பெருகுமாறு அறுத்து அவனுயிரையும் சிதைப்பதாக இருக்கையில், பரமசிவன் அருகில் வந்து வணங்கிப் பலவாறு ப்ரார்த்தித்ததனால் சிவபஜனஞ் செய்தார்க்குப் பலன் கைமேல் கண்டதாக இருக்கட்டுமென்றெண்ணிய கண்ணபிரான் நான்கு கைகளோடும் உயிரோடும் அவனை விட்டருளினன் என்பதாம்.

எம்பெருமானார் சங்கராதி கர்வபங்கம் பண்ணினது, ஸ்ரீ பாஷ்யாதி க்ரந்த ரசனையினாலும், அத்வைதி ப்ரப்ருதிகளை வாதப்போரில் வென்று ஆட்படுத்திக்கொண்டதனாலும் என்றுணர்க. இவ்விஷயம் மேலே மூன்றாவது பாதத்தின் விவரணத்தினாலும் விளங்கும்.

## [2. ஸ்வபலாத் உத்த்ருதயாதவப்ரகாச:]

கண்ணபிரான் பரமான அர்த்தத்தில், யாதவர்களின் ப்ரகாசம் யயாதி சாபத்தினால் மங்கிக் கிடக்கையில், "கோபாலோ யாதவம் வம்சம் மக்நமப்யுத்தரிஷ்யதி" என்கிறபடியே அந்த ப்ரகாசத்தைத் தனது வலிமையினால் உத்தாரம் செய்தவன் என்று கொள்ளக் கடவது. யதுகுலத்திலே பிறந்த யாதவர்களை விளக்கமுறச் செய்தருளினவன் கண்ணபிரான் என்க. உடையவர்பரமான அர்த்தத்தில், 'யாதவப்ரகாச' என்று முழுச்சொல்லாகக்கொண்டு, அப்பெயர்பூண்ட மாயாவாதி குருவைத் தம்முடைய க்ருபாபலத்தினால் உத்தரிப்பித்தவர் என்று கொள்க. முதலில் தமக்கு உபாத்யாயராயிருந்த யாதவப்ரகாசரையும் தமக்கு அடிமைப்படுத்திக்கொள்ளும்படியான ப்ரபாவமுடையவர் எம்பெருமானார் என்க. இவ்வரலாறு உடையவர் சரிதையில் விரிவாகக் காணத்தக்கது.

## [3. அவரோபிதவாந் ச்ருதே: அபார்த்தாந்]

'அபார்த்தாந் ச்ருதே: அவரோபிதவாந்' என்று அந்வயம். இதில் பங்க ச்லேஷையுள்ளது. அபார்த்தாந் என்னும் பதம், (அ+பார்த்தாந்) என்றும் (அப+அர்த்தாந்) என்றும் பிரியும். பார்த்தனென்று அர்ஜுநனைச் சொல்லி, பார்த்தனல்லாத [அர்ஜுந விரோதிகளான] துர்யோதநாதிகளை அபார்த்தர்களென்று சொல்லுவதாகக் கண்ணன்பரமான அர்த்தத்தில் கொள்ளவேண்டும். ச்ருதி யென்று கீர்த்திக்கும் பெயர்; வேதத்திற்கும் பெயர். கண்ணபிரான் அபார்த்தர்களான துர்யோதநாதிகளைக் கீர்த்தியிலிருந்து கீழே இறக்கிவிட்டான்; பாண்டவ பக்ஷபாதியாயிருந்து *பயிலுமைவர்தோன் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குழிய நூற்றுவரும் பட்டழியச்செய்து அவர்களைக் கீர்த்தி யிழந்தவர்களாகச் செய்தானென்றபடி. ஸ்வாமிபரமாகவுரை யென்னில்: [ச்ருதே: அபார்த்தாந் அவ

ரோபிதவாங்] இதர மதஸ்தர்கள் வேதங்களுக்குச் செய்த அபார்த்தங்களை வைிரோத்த ப்ரதர்சநத்தினால் நிரஸித்தருளினவர். ஆனதுபற்றியே *அபிநோதய சங்கராதி கர்வாக முதல் பாதத்தில் கூறப்பட்டாரென்று உணர்க.

இனி, ச்ருதியின் அபார்த்தங்களை எம்பெருமானார் நிரஸித்தருளின விதம் விவரிக்கப்படுகிறது:—

“அவரோபிதவாந் ச்ருதேரபார்த்தாந்” என்கிற மூன்றாவது பாதத்தினால் ஸ்ரீராமாநுஜர் வேதத்திற்குப் பிறர் கூறின அபார்த்தங்களைத் தள்ளி உண்மைப் பொருள்களை யுரைத்தருளினதாகத் தெரிவிக்கப்படுகிறது. 'எந்த ச்ருதி வாக்யத்திற்கு எவ்விதமாகப் பிறர் ஏலாத பொருளைக் கூறினர்? அங்கு எம்பெருமானார் எவ்விதமான அர்த்தம் கூறி யருளினார்?' என்பதைத் தெரிவிக்க, ஈண்டு ஒரு விஷயத்தை யெடுத்துக்கொண்டு விவரிக்கின்றோம்:—

உபநிஷத்துக்களில் சில வாக்யங்களில் ஒரு தத்வமே உள்ளதாகவும் பல தத்வங்கள் இல்லையென்பதாகவும் பேசப்பட்டுள்ளது. *நேஹ நாநாஸ்தி கிஞ்சந* என்பது ஒரு ச்ருதி வாக்யம். 'ந இஹ நாநா அஸ்தி கிஞ்சந' என்று பதம் பிரியும். இஹ நாநா கிஞ்சந நாஸ்தி—இவ்வுலகில் பலவென்று சொல்லக்கூடியது எதுவுமில்லை என்பது இந்த ச்ருதி வாக்யத்தின் பொருள். “ஏகமேவ அத்விதீயம்” என்கிற மற்றொரு ச்ருதி வாக்யமும் மேற்கூறிய பொருளை (அதாவது: பல தத்வங்கள் கிடையா; ஒரே தத்வந்தா னுள்ளது என்னும் பொருளை)த் திடப்படுத்தியுள்ளது. இப்படிப் பல வாக்யங்கள் உபநிஷத்துக்களில் உள்ளனவென்று வைத்துக்கொள்வோம்.

அந்த உபநிஷத்துக்களிலேயே மற்றும் சில இடங்களில் பல தத்வங்கள் உள்ளனவென்று காட்டுகின்ற வாக்யங்களையும் காணுகின்றோம்; அப்படிப்பட்ட வாக்யங்களில் சிலவற்றை எடுத்துக் காட்டுவோம்:—

(1) *க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநௌ ஈசதே தேவ ஏக:* இது ஒரு ச்ருதி வாக்யம். இதனால், அசேதநப் பொருளும் சேதநப் பொருளும் இவ்விரண்டுக்கும் இறைவனான ஒரு பகவானும் ஆக மூன்று தத்வங்களுள்ளனவாகச் சொல்லப்படுகிறது.

(2) *ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜா வீசநீசௌ*- இதுவும் ஒரு ச்ருதி வாக்யம். இதனாலும் ஒரே தத்வமல்ல, வெவ்வேறுபட்ட தத்வங்களுண்டென்பது காட்டப்படுகிறது.

(3) *த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே, தயோரந்ய: பிப்பலம் ஸ்வாது அத்தி அநச்நந்நந்யோ அபிசாகசீதி.* -இதுவும் அப்படிப்பட்ட மற்றொரு ச்ருதி வாக்யம். இரண்டு பக்ஷிகள் ஒன்றோடொன்று இணங்கிக்கொண்டு ஒரு வ்ருக்ஷத்தில் (அசேதநமான சரீரத்தில்) அமர்ந்திருக்கின்றன வென்றும், அவ்விரண்டு பறவைகளுள் ஒரு பறவையானது (ஜீவாத்மா) புண்ய பாபரூப கர்ம பலன்களை இனிதாக உண்டு களிக்கின்றதென்றும், மற்றொரு பறவையானது (பரமாத்மா) ஒன்றும் உண்ணாமல் மிக விளங்குகின்றதென்றும், இந்த ச்ருதி வாக்யத்தினால் கூறப்படுகின்றது. இதனால் சேதந-அசேதந ஈச்வரர்களாகிற மூன்று தத்வங்களுள்ளன வென்பது தெளிவாக விளங்கிற்று. இப்படிப்பட்ட ச்ருதி வாக்யங்களும் உபநிஷத்துக்களில் பல வுள்ளன வென்று வைத்துக்கொள்வோம்.

பல தத்வங்கள் கிடையா; ஒரே தத்வந்தா னுள்ளதென்று கூறுவதாக முதலில் எடுத்துக் காட்டப்பட்ட ச்ருதி வாக்யங்களானவை அபேத ச்ருதி என வழங்கப்பெறும்; அத்வைத ச்ருதி யென்பதும் மறுபெயர். பிறகு, பல தத்வங்க ளுள்ளன வென்று கூறுவ தாக எடுத்துக் காட்டப்பட்ட ச்ருதி வாக்யங்களானவை பேத ச்ருதி அல்லது த்வைத ச்ருதி யென்று வழங்கப்பெறும். இவை ஒன்றோடொன்று முரண்படுகிற வார்த்தைகளாக இருக்கின்றன. 'பல தத்வங்கள் கிடையா; ஒன்றேதான்' என்று ஓரிடத்திற் சொல்லுவதும், பல தத்வங்க ளுண்டென்று பிறிதோரிடத்தில் விவரித்துக் காட்டிக் கூறுவதும் பரஸ்பரம் முரண்பட்டதே யன்றோ? ஒன்றுதான் தத்வம் என்று சொல்லிவிட்டால், பல தத்வங்க ளுள்ளனவாகச் சொல்லுதல் கூடாது; பல தத்வங்கள் உண்டென்றால் ஒன்றே தத்வமென்பது பொருந்தாது; ஆகவே முரண்பாடு மூதலிக்கப்பட்டதாயிற்று.

'வேதநூல் ஓதுகின்றது உண்மையல்லதில்லை மற்றுரைக்கிலே'' என்ற திருமழிசை யாழ்வார் திருவாக்கின்படி யதார்த்தமே யுரைக்கவல்ல உபநிஷத்துக்கள் பரஸ்பர விருத்தமாகவோ அஸங்கதமாகவோ சொல்லமாட்டா வாதலால், மேலே யெடுத்துக் காட்டின ச்ருதி வாக்யங்களை முரண்பாடு சிறிதுமின்றியே ஸங்கதமாகப் பொருத்த விடுகிற வழி என்ன? என்பது ஆராயப்படவேண்டும். ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள், ஒரு தத்வமே யுள்ளதென்று கூறுகின்ற அத்வைத ச்ருதிகளாக நாம் மேலே எடுத்துக் காட்டிய அபேத ச்ருதிகளை முக்யமாகக் கொண்டு ஒன்றேதான் தத்வமென்று நிர்வஹித்தார்கள், பல தத்வங்க ளுண்டென்று கூறுகின்ற த்வைத ச்ருதிகளாக நாம் மேலே யெடுத்துக் காட்டிய பேத ச்ருதிகளை ஒருவாறு ஔபசாரிகமாக நிர்வஹிக்கலா மென்றும் அவர்கள் கருதினார்கள். சேதநப் பொருள்களும் அசேதநப் பொருள்களும் பலவாகத் தோன்றுவது மாயையின் தோற்றமே யாதலால், அப்படிப்பட்ட தோற்றத்தை நோக்காகக் கொண்டு பேத ச்ருதிகள் அவதரித்ததாக நிர்வஹித்துவிடலா மென்பது இவ்வத்வைதிகளின் கருத்து. ஆகவே த்வைத ச்ருதிகளைத் தள்ளி அத்வைத ச்ருதிகளையே முக்யமாகக் கொண்டபடியால், இவர்கள் அத்வைதிகளென்று வழங்கப்படுகிறார்கள். பேதம் மாயைத்தோற்றம் என்கிறார்களாதலால் அவர்கள் மாயாவாதிகளென்றும் வழங்கப்படுகிறார்கள்.

ஸ்ரீமத் ஆனந்த தீர்த்த ஸ்வாமிகள் த்வைத ச்ருதிகளான பேத ச்ருதிகளை முக்யமாகக்கொண்டு அத்வைத ச்ருதிகளை ஔபசாரிகமாக நிர்வஹிக்கலா மென்று கருதுகின்றார்களாதலால், அவர்கள் (மத்வாசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்கள்) த்வைதிகள் என வழங்கப்படுகிறார்கள்.

ஆக, மேற்கூறிய (அத்வைதம் த்வைதம் என்கிற) இரண்டு ஸம்ப்ரதாயங்களிலும் ஒருவகையான உபநிஷத் வாக்யங்கள் ஒதுக்கப்பட்டு, ஒருவகையான உபநிஷத் வாக்யங்களே முக்யமாகக் கொள்ளப்படுகின்றன வென்பது தேறுகின்றது. சித் அசித் ஈச்வரன் என மூன்று தத்வங்கள் ஸத்யமாகவுள்ளன வென்கிற அர்த்தம் ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகட்கும் அவரைச் சார்ந்தவர்கட்கும் உடன்பாடன்று. ஒரே தத்வந்தா னுள்ளது என்கிற அர்த்தம் ஸ்ரீ மத்வாசார்ய ஸ்வாமிகட்கும் அவரைச் சார்ந்தவர்கட்கும் உடன்பாடன்று.

அத்வைதிகள் சில ச்ருதி வாக்யங்களைத் தள்ளவும், த்வைதிகள் சில ச்ருதி வாக்யங்களைத் தள்ளவும் நேர்ந்திருக்கின்றதென்பதை இதுவரையில் விவரித்தோமன்றோ. இனி, ஒரு ச்ருதி வாக்யத்தையும் தள்ளாமல் உபநிஷத் வாக்யங்களெல்லாவற்றையுமே ஸாரஸ்யம் படுத்தி ஒன்றையு மொதுக்காமல் மிகவும் பொருத்தமாகவே நிர்வஹித்தருளினவர்கள் நம்

பூருவாசாரியர்கள். அவர்களின் தலைவர் பகவத் ராமாநுஜர். ஒரே தத்வந்தா னுண்டு என்று தெரிவிக்கிற ச்ருதி வாக்யங்களையும், பல தத்வங்க ளுண்டென்று தெரிவிக்கிற ச்ருதி வாக்யங்களையும் எப்படிப் பொருந்தவிட முடியு மென்னில்: நம் போராசிரியர் எப்படிப் பொருந்த விட்டிருக்கிறா ரென்பது இனி யுபபாதிக்கப்படுகிறது.

உலகத்தில் ஒரு வஸ்துவைப் பல வென்றும் ஒன்றே என்றும் சொல்வதற்குப் பொருத்த முண்டு. உதாரணமாக, ஒரு கடிகாரத்தை யெடுத்துக் கொள்வோம்; அது ஒன்றா பலவா? என்று கேட்டால், கையில் ஒரு கடிகாரமே உள்ளதாகையால் ஒன்றே என்று சொல்வோம். ஆனால் அதை நாம் ஊன்றிப் பார்க்குங்கால், அதில் பலபல வஸ்துக்கள் அவயவங்களாக (உறுப்புகளாகச்) சேர்ந்திருப்பது புலப்படாமற் போகாது. பல அவயவங்களோடு கூடிய அவயவியான வஸ்து ஒன்றே என்று ஏற்படுமேயல்லது, ஒரு வஸ்துவுக்கு மேல் வேறொரு வஸ்துவே இதில் கிடையாதென்று சொல்வதாக ஒருகாலும் ஏற்படாது. இப்படி கடிகார மென்கிற ஒரு வஸ்துவே யல்ல; உலகிற் காணும் எந்த வஸ்துவை யெடுத்துக் கொண்டு பார்த்தாலும், இப்படி ஒரு விதத்தில் ஐக்யமும் மற்றொரு விதத்தில் அநேகத்வமும் தோன்றியே தீரும். படுக்கை, தலையணை, வண்டி, வீடு முதலிய ஒவ்வொரு வஸ்துவும் ஸ்தூல த்ருஷ்டியில் ஒரே வஸ்துவாகவும், உறுப்புகளை உற்றுக் காணுமிடத்துப் பல வஸ்துக்களாகவும் கொள்ளப்படுவது அநுபவஸித்தம்.

நம்மையே யெடுத்துக்கொள்வோம். 'ராமாநுஜனென்பவன் ஒருவன்' என்று சொல்லுகிறோம். 'செவி வாய் கண் மூக்கு முதலான பல உறுப்புகளோடு கூடின ஆத்மாவாகிய அந்த வ்யக்தி ஒருவன்' என்று சொன்னதாகத் தேறுமேயல்லது, அவனிடத்தில் பல வஸ்துக்கள் இல்லை என்று சொன்னதாகத் தேறமாட்டாதன்றோ? இன்னுமொன்று பாருங்கள்: 'ராமாநுஜன் சிவப்பாயிருக்கிறான்' என்றும், 'ராமாநுஜன் மேதாவியாயிருக்கிறான்' என்றும் வழங்கி வருகிறோம். இவ்விரண்டு வார்த்தைகளிலும் 'ராமாநுஜன்' என்கிற சொல் உள்ளது. சிவப்பாயிருக்கிறா னென்னும்போது ராமாநுஜ னென்ற சொல்லானது சரீரத்தை நோக்கியது; மேதாவியா யிருக்கிறா னென்னும்போது அந்தச் சொல் ஆத்மாவை நோக்கியது. ஏன்? சிவப்பு நிறம் சரீரத்திற்கு ஏற்குமேயல்லது ஆத்மாவுக்கு ஏலாது. மேதாவித்வம் (அதாவது: அறிவுடைமை) ஆத்மாவுக்கு ஏற்குமேயல்லது, சரீரத்திற்கு ஏலாது. ஆகவே, ஒரே பதம் சில ஸமயங்களில் ஆத்மாவைக் குறிப்பதாயும் சில ஸமயங்களில் உடம்பைக் குறிப்பதாயும் தேறுகின்றதென்பது தெற்றென விளங்கிற்று.

இனி, நாம் முன்னே காட்டிய பேத ச்ருதிகளையும் அபேத ச்ருதிகளையு மெடுத்துக் கொள்வோம். சித்து அசித்து ஈச்வர னென்ற மூன்று தத்வங்க ளுள்ளனவாகச் சொல்லுகிற ச்ருதி வாக்யங்கள் (பேத ச்ருதிகளானவை), உண்மையாக அப்படிப்பட்ட மூன்று பொருள்க ளிருப்பனவாகச் சொல்லுகின்றன வாதலால் பொருந்தும். ஒன்றே யுள்ளது என்று சொல்லுகிற ச்ருதி வாக்யங்கள் (அபேத ச்ருதிகளானவை), சேதன அசேதனப் பொருள்களை சரீரமாகக் கொண்ட பரம்பொருள் ஒன்றே என்ற உண்மையைக் காட்டுகின்றன வாதலால் இவையும் பொருந்தும். இப்படி ஸமந்வயப்படுத்திக் காட்டுவதற்குத் துணைபுரியும் ச்ருதி வாக்யங்கள், 'யஸ்ய ப்ருதிவீ சரீரம்...... யஸ்ய ஆத்மா சரீரம்' இத்யாதியாக உள்ளவைகளாம். இவை சரீர சரீரிபாவத்தை விளக்கவல்ல வாக்யங்களாகும். பேதத்தையும் அபேதத்தையும் பொருந்த விடுகிற வாக்யங்க ளாதலால் கடகச்ருதி யென்றும் வழங்கப்பெறுமிவை. இப்படிப்பட்ட ச்ருதி வாக்யங்களில் த்வைதிகளும் அத்வைதிகளும் கண் செலுத்தாமையினாலேயே, அவர்கள் ஸகல ச்ருதி வாக்யங்களையும் ஸமரஸப்படுத்த அவ

காசமில்லை யாயிற்று. நம்முடைய ஸம்ப்ரதாயத்திற்கு இந்த யுகாதியில் ப்ரதம ப்ரவர்த்தகரான நம்மாழ்வார் தமது திருவாய்மொழியில் 'உடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும்' என்கிற அருமருந்தன்ன ஸ்ரீஸூக்தியினால் சரீராத்மபாவத்தை விசதமாகக் காட்டியருளினபடியால், ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் முதலான நம் ஆசார்ய சிகாமணிகள் அந்தத் திவ்ய ஸ்ரீஸூக்தியையே பின்பற்றி ஸகல ச்ருதி வாக்யங்களையும் ஸமஞ்ஜஸமாக நிர்வஹிக்க வல்லவர்களாயினர். அப்படிப்பட்ட ஆசார்யர்களில் தலைவரான ஸ்வாமி ராமாநுஜரைப்பற்றி 'அவரோபிதவாந் ச்ருதோபார்த்தாந்' என்று கூறியது மிகப் பொருத்தமானதென்று உணரத்தக்கது.

ஆக, இந்த வ்யாஸத்தினால் விசிஷ்டாத்வைதக் கொள்கையை விளக்கமாக விவரித்தோமாயினும், இவ்வர்த்தங்களையெல்லாம் ஸாரமாகவும் சுருக்கமாகவும் நெஞ்சிற் பதிய வைத்துக்கொள்ள ஸ்ரீ வேதாந்ததேசிகன் தாமே ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் அருளிச்செய்த ச்லோகரத்ன மொன்றுண்டு; அதைக் கண்டபாடம் செய்வது நல்லதென்று கருதிக் கீழே குறிப்பிடுகிறோம்.

“பிதோ பேதம் தத்வேஷ்வபிலபதி பேதச்ருதிரதோ
விசிஷ்டைக்யாத் ஐக்யச்ருதிரபி ச ஸார்த்தா பகவதி |
இமாவர்த்தௌ கோப்தும் நிகிலஜகதந்தர் யமயிதா
நிரீசோ லக்ஷ்மீச: ச்ருதிபிரபராபி: ப்ரணிகதே ” ,, என்பதாமது.

நம்முடைய ஸித்தாந்தத்திற்கு சரீராத்மபாவமே உயிரானதென்றும், அதைத் திடமாகத் தெரிந்துகொள்ளப்பெறில் எந்த மதாந்தரஸ்தர்களையும் எளிதில் வென்றுவிடலா மென்றும் ஸ்ரீ தேசிகன் தாமே ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஒரு ச்லோகரத்ந மருளியுள்ளார்; அதுவும் கண்டபாடஞ் செய்துகொள்ளத் தக்கதென்று கீழே குறிப்பிடலாகிறது.

“யத்யேதம் யதிஸார்வபௌமகதிதம் வித்யாத் அவித்யாதம:
ப்ரத்யூஷம் ப்ரதிதந்த்ரமந்திமயுகே கச்சித் விபச்சித்தம: |
தத்ரைகத்ர ஜடித்யுபைதி விலயம் தத்தந்மதஸ்தாபநா
ஹேவாகப்ரதமாந ஹைதுகசதாகல்லோல கோலாஹல: ” ” என்பதாம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

---

# மார்கழிநீராட்டமும் — எம்பெருமானாரும்.

சென்றவிதழில் “பெரும்பூதூர்மாமுனிக்குப் பின்னானாள் வாழியே” என்னும் வாழியை விவரிக்குமிடத்தில் ஆண்டாளருளிச் செயலால் எம்பெருமானார்பெருமை மிகத் தெளிவாக விளங்குமென்ற படியை விரிவாக நிரூபித்தோம். அப்போது, மார்கழி நீராட்டமாவது மார்க்கசீர்ஷாவகாஹநமென்றும், அதாவது மார்க்கங்களுக்குள்ளே சீர்ஷமான [உபாயங்களுக்குள் தலைசிறந்த] ஆசார்யாபிமானத்தில் அவகாஹிப்பதே யென்றும் கூறி, அப்படிப்பட்ட மார்க்கசீர்ஷாவகாஹனத்தில்தான் ஆண்டாள் மிகுந்த அபிநிவேசமுடையவளென்பதை நாச்சியார் திருமொழிப் பாசுரங்களினால் நிரூபிப்பதும் செய்தோம். பிள்ளைலோகாசார்யரும் ஸ்ரீ வசநபூஷண திவ்ய சாஸ்த்ரத்தின் முடிவில் ஆண்டாள் பாசுரத்தைக் கொண்டே சரமோபாய வைபவஸ்தாபநம் செய்தருளியிருக்கையாலே அவ்விஷயத்தில் இன்னமும் விரிவாக நிரூபிக்கவும் தெளிவு பிறப்பிக்கவும் அவசியமில்லை. “ஆழிமழைக்கு

அன்றே! நாங்களும் மகிழ்ந்து மார்கழி நீராட வாழுலகினில் பெய்திடாய்" என்றதற்குச் சேர எம்பெருமானார்க்கு இதுதன்னிலுள்ள அன்வயம் நிரூபிக்கப்படவேண்டுவது மிக அவசியமாதலால் அதுவும் இப்போது நிரூபிக்கப்படுகிறது.

உபாயங்களில் தலையான ஆசார்யாபிமானத்தின் ப்ரஸ்தாவம் வந்தபோதே ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு எம்பெருமானாருடைய நினைவு வந்தே தீருமென்பதில் விவாதமுண்டோ? எம்பெருமானார்க்கு முன்னேயும் சில ஆசாரியர்கள் அவதரித்தருளியிருந்தாலும் நம்முடைய உஜ்ஜீவனத்துக்காக அவர்களுடைய அபிமானத்தை நாம் கண்டிலோம். எம்பெருமானார் திருவவதரித்தபின்புதான் ஆசார்யாபிமானமென்கிற சொல்வழக்கமே தோன்றியது என்று சொல்லவும் பொருந்துமன்றோ. இப்படிச் சொல்லுதற்குத் துணையான உபபத்தியைக் கேளீர்;— ஸ்வாமி எம்பெருமானார் ஒருநாள் விபீஷண சரணாகதி ப்ரகரணத்தை உபந்யஸித்தருளாநின்றார்; * த்யக்த்வா புத்ராம்ச்ச தாராம்ச்ச ராகவம் சரணம் கத: * என்கிறபடியே புறப்பட்டான பற்றுக்களையுடைய வானரவீரர்களோடே விட்டு விபீஷணன் * ஸர்வலோக சரண்யாய ராகவாய மஹாத்மனே, நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம் * என்று சொல்லி வானரமுதலிகளைப் ப்ரார்த்திக்க, அவர்கள் இவ்விபீஷணனை அநுகூலனாகக் கொள்ளாமல் ப்ரதிகூலனாகவே கொண்டு பல்வகைத் தீங்குகளைச் செய்யத் தொடங்கினார்கள் — என்கிறவிதனை ஸ்வாமி விரிவாக உபந்யஸித்தருளா நிற்கையில், அப்போது ஆனந்தமாகக் கேட்டுக் கொண்டிருந்தவர்களில் ஒருவரான பிள்ளையுறங்கா வில்லி தாஸர் கோஷ்டியில் நின்று எழுந்திருந்து விக்கி விக்கியழுது தம்முடைய வொரு பெரிய ஸந்தேஹத்தை விண்ணப்பஞ்செய்து இதைப் பரிஹரித்தருளினாலொழிய மேலே கதை கேட்க விருப்பமில்லாமையைக் கூறி நின்றார். அவர் விண்ணப்பித்த ஸந்தேஹமாவது— விபீஷணாழ்வானுக்கு ஆர்த்தி முதலிய அதிகார பூர்த்தியில் யாதொரு குறையுமில்லை; ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமும் கபடமாகவல்லாமல் உண்மையாகவேயுண்டாயிருந்தன. பக்தியுடன் வந்து சேர்ந்த இவனுக்கே பகவத் கோஷ்டியில் ப்ரவேசம் எளிதாகக் கிடைக்கவில்லையென்றும், பகவானுக்கு அந்தரங்க மந்திரிகளாக இருந்தவர்களால் மிகுந்த பரிபவமும் ஆக்ஷேபமும் விளைந்ததென்றும் கண்டால், அவ்விபீஷணாழ்வானுடைய அதிகாரத்தில் நூற்றிலொன்று கூட இல்லாத எம்போலியர்க்கு பகவத்ஸேவையைக் கனவில்கூடக் காண்பதற்கு ப்ரஸக்தி யில்லையன்றோ; ஆகவே எம்போலியர் உஜ்ஜீவிக்க வழியுண்டோ இல்லையோ? என்பதாக.

இதைக் கேட்ட எம்பெருமானார் உடனே அவர்க்குப் பரம த்ருப்தியமாக ப்ரத்யுத்தரமருளிச் செய்தார்; "விபீஷணாழ்வானைப்போலே நாம் எம்பெருமானைப் பற்றினவன்றோ இப்படி ஸந்தேஹித்து இடிவிழுந்து கிடக்கவேண்டும்; நாம் எம்பெருமான் கை பார்த்திருக்குமவர்களல்லோம் காணும்; உமக்கு நானுண்டு, எனக்குப் பெரிய நம்பியுண்டு" என்று.

இதன் கருத்தாவது—எம்பெருமான் மோக்ஷமளிக்கவும் வல்லவன், மேன் மேலும் ஸம்ஸாரத்திலே தள்ளவும் வல்லவன். நிக்ரஹாநுக்ரஹங்களுக்குப் போதுமான ஸ்வாதந்திரியமுடையவனாகையாலே அவனைப் பற்றினார்க்கு நெஞ்சுதளும்பியேயிருக்க நேரும்; அவனைப் போலன்றிக்கே அநுக்ரஹமே வடிவெடுத்த ஆசாரியர்களைப் பற்றினார்க்கு ஸந்தேஹ கந்தமுமின்றிக்கே மார்பிலே கைவைத்து உறங்கலாம்படியிருக்கும் என்கை. இவ்வர்த்தம் மஹர்ஷிகளின் வசனத்தாலும் தேறுகின்றது; * ஸித்திர் பவதி வா நேதி ஸம்சய: அச்யுதஸேவிநாம், ந ஸம்சயோஸ்தி தத்பக்தபரிசர்யாரதாத்மநாம் * என்கிற ப்ரமாணத்தை இங்கே

அருளக்கூடியது. [இதன் பொருள் ;—எம்பெருமானைப் பற்றினார்க்கு ஸத்கதிப்ராப்தியாகிற ஸித்தியுண்டோ இல்லையோ வென்கிற ஸந்தேஹ முள்ளது ; தத்பக்தர்களாகிற பாகவதர்களைப் பற்றினார்க்கு அப்படிப்பட்ட ஸந்தேஹம் உதிக்கவே மாட்டாது என்பதாம்.]

இங்ஙனே அவரவர்கள் தம் தம் ஆசாரியர்களைப் பணிந்து உஜ்ஜீவித்தல் என்பது இருக்கச் செய்தேயும், * தஸ்மிந் ராமாநுஜார்யே குருரிதி ச பதம் பாதி நாந்யத்ர * என்கிற படியே ஆசார்யனென்கிற சொல்லுக்குப் பொருளாயிருக்குந்தன்மை எம்பெருமானார் ஒருவர்க்கே உரித்தாக வுள்ளதாதலால் அவருடைய திருவடிஸம்பந்தம் பெற்றவர்களுக்கே ஸத்கதி ப்ராப்தியில் ஸந்தேஹமற்றிருக்க ப்ராப்தம்.

திருவடிஸம்பந்தமென்று விசேஷித்துச் சொல்லவேண்டிய அவச்யமுமில்லை ; ஏதேனுமொரு ஸம்பந்தமிருந்தாலும் போதும். திருவடிஸம்பந்தந் தவிர வேறு என்ன ஸம்பந்த மிருக்க முடியுமென்று சிலர் கேட்கவும் சிந்திக்கவுங்கூடும்.

திருவடி ஸம்பந்தம்போல் திருமுடி ஸம்பந்தமும் ஒன்றுண்டே ; முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தம், பிற்பட்டவர்களுக்குத் திருவடி ஸம்பந்தம் என்று நம்பூர்வர்களே பேசித்துக் காட்டியுள்ளார்கள். கூரத்தாழ்வானுடைய பெருமையைப் பேசப் புகுந்தவிடத்து *அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜத்வந்த்வ மாச்ரித்ய பூர்வே மூர்த்நா யஸ்யாந்வய முபகதா தேசிகா முக்திமாபு: ஸோயம் ராமாநுஜமுநிரபி * என்னும் ச்லோகத்தில் இவ்விஷயம் வ்யக்தமாகக் கூறப்பட்டுள்ளது. எம்பெருமானார்க்கு முன்புள்ள முதலிகள் அவருடைய திருமுடி ஸம்பந்தத்தினால் முக்தி பெற்றார்களென்றும், பிற்பட்டவர்கள் அவருடைய திருவடி ஸம்பந்தத்தினால் முக்தி பெற்றார்கள்—பெறுகிறார்கள்—பெறுவார்கள் என்றும் சொல்லப்படுகிற இவ்விஷயம் வேதாந்த தேசிகனுடைய திருவாக்கிலும் ஸுவ்யக்தமாக வுள்ளது; அவர் தாம் பணித்த ந்யாயபரிசுத்தியில் எம்பெருமானாரைப்பற்றியருளிச்செய்த மங்கள ச்லோகத்தில் இது காணத்தக்கது. அது எங்ஙனே யென்னில் ; * யஸ்த்-ஸ்வயமிதரம் உபநத: ஸந்தேநைவ க்ரூரத்வலைராயோ ஜவ்லைதந ஸத்யதுங்க மநீஷிணோ யந்த்ரஸ்ஸ்வாத் யாதுமாநாம் ந--பத்யுஸ் ஸம்யமிநாம் ப்ரணம்ய சரணௌ தத்பாதகோடீரயோஸ் ஸம்பந்தேந ஸமித்யமாநவிபவாந் தந்யாந் ததா அந்யாந் குரூந் * என்பது அந்த மங்கள ச்லோகம். இதன் பொருளாவது—ஸம்யமிநாம் பத்யு:—யதிராஜரான எம்பெருமானாருடைய, சரணௌ—திருவடிகளை, ப்ரணம்ய—வணங்கியும், தத்பாத கோடீரயோ: ஸம்பந்தேந—அந்த எம்பெருமானாருடைய திருவடியென்ன திருமுடியென்ன இவற்றினுடைய ஸம்பந்தத்தினால், ஸமித்யமாநவிபவாந்—மிகப் பெருமை பெற்றவர்களாய், தந்யாந்—க்ருதார்த்தர்களான, குரூந் ப்ரணம்ய—ஆசார்யர்களை வணங்கியும்..........ந்யாய பரிசுத்தியென்கிற இந்த க்ரந்தம் செய்யப்படுகிறது—என்கை. இதில் * தத்பாத கோடீரயோஸ் ஸம்பந்தேந * என்றது சிறந்த ஸ்ரீ ஸூக்தி. கோடீரமென்று திருமுடிக்குப் பெயர். பிற்பட்டவர்களுக்குத் திருவடி ஸம்பந்தம் போலவே முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தம் உத்தாரகமென்று இதனால் நன்கு காட்டப்பட்டதாயிற்று.

" பிற்பட்டவர்களுக்கு ஸ்வாமியின் திருவடி ஸம்பந்தத்தினால் மோக்ஷமென்றால் இது நெஞ்சில் நன்கு பொருந்துகின்றது. முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தத்தினால் மோக்ஷமுண்டாயிற்றென்றால் இந்த வார்த்தை அங்கீகரிக்கவேயில்லையே; ஸ்ரீமந் நாதமுனிகள் உய்யக்கொண்டார் மணக்கால்நம்பிபோல்வார்தாமே ஸ்வாமிக்கு முற்பட்டவர்கள்;

அவர்கள் என்றைக்கோ பரமபதம் போய்ச் சேர்ந்தவர்களன்றோ; அவர்களது காலத்தில் ஸ்வாமி யெம்பெருமானார் அவதரித்திருந்தாலன்றோ இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு நேர்ந்ததென்று சொல்ல இடமுண்டு. இவருடைய அவதாரமே நடந்திலாத ஸமயத்தில் இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு எப்படி ப்ராப்தமாகக் கூடும்? இது அஸம்பாவிதமான வார்த்தையாக இருக்கின்றதே!" என்று சிலர் சங்கிக்கக் கூடும். இதற்குச் சொல்லுகிறோம்; சாஸ்த்ரங்களில் உத்தம புருஷர்களின் ப்ரபாவங்களைச் சொல்லுமிடத்து * தச பூர்வாந் தச அபராந்......புநாதி * என்றும் * ஸப்த ஸப்த ச ஸப்த ச * என்றும் சொல்லப்பட்டிருப்பது ப்ரஸித்தம். ஒரு வம்சத்தில் ஒரு மஹநீய புருஷன் தோன்றினால் அவனுடைய பெருமேன்மையினால் முன்னே பல தலைமுறையாரும் பின்னே பல தலைமுறையாரும் வாழ்ச்சி பெறுவதாகச் சொல்லப்படுகிறது. நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் * செடியார் நோய்களெல்லாம் துரந்து எமர் கீழ்மேலெழுபிறப்பும் விடியா வெந்நரகத்து என்றுஞ் சேர்தல்மாறினரே * என்றும் * கேசவன்தமர் கீழ்மேலெமரேழெழுபிறப்பும் மாசதிரிது பெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா * என்றும் அருளிச்செய்தார். ஆகவே முற்பட்டவர்களையும் ஸத்கதி பெறுவிக்கும் பெருமை பிற்பட்டவர்களுக்கு விளைகின்றதென்பது சாஸ்த்ர ஸம்மதமேயென்றுணர்க.

முற்பட்டவர்களின் விஷயம் எப்படியாவது இருக்கட்டும்; பிற்பட்டவர்களுக்கு ஸ்வஸம்பந்தத்தினால் ஸத்கதிபெறுவிப்பது தவறாதென்பதே இங்கு முக்கியமாக விவக்ஷிதம். நம்முடைய ஸதாசார்யபரம்பரையில் இப்பெருமை எம்பெருமானார்க்கு அஸாதாரணமாயிருக்கும். இதனை சரணாகதி கத்யபாஷ்யத்தில் ச்ருதப்ரகாசிகாசார்யரும், ந்யாஸதிலகத்தில் வேதாந்த தேசிகனும், யதிராஜ விம்சதியில் மணவாளமாமுனிகளும் அருளிச்செய்துள்ளார்கள்.

கத்யபாஷ்யத்திலருளிச் செய்தபடி யெங்ஙனே யென்னில்;— சரணாகதி கத்யத்தில் எம்பெருமானார் ஸ்ரீரங்கநாதன் திருவடிகளிலே ப்ரபத்தி பண்ணுவதற்குமுன்னே * பகவந் நாராயணாபிமதாநுரூப * என்று தொடங்கி * அகில ஜகந்மாதரம் அஸ்மந்மாதரம் அசரண்ய சரண்யாம் அநந்யசரண: சரணமஹம் ப்ரபத்யே * என்று பெரிய பிராட்டியார் திருவடிகளிலே புருஷகார ப்ரபத்தி செய்தருளி * பாரமார்த்திக பகவச் சரணாரவிந்த சரணாகதி: யதாவஸ்திதா அவிரதா அஸ்து மே * என்று ப்ரார்த்தித்தார். [பெரிய பெருமாள் திருவடிகளிலே நான் பண்ணப்போகிற ப்ரபத்தியானது ஸபலமாவதற்காகப் பிராட்டியாரே! உமது திருவடிகளைத் தொழுகின்றேன் என்றவாறு.] இதற்குப் பெரிய பிராட்டியாருடைய திருவாக்கிலிருந்து இரண்டு வாக்யங்கள் மறுமொழியாக அவதரித்துள்ளன— * அஸ்து தே; தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே * என்று. இவ்விடத்தில் * அஸ்து தே * என்பதே போதுமானது. [ததாஸ்து— என்றபடி.] இதற்குமேலும் * தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே * என்றொரு வாக்யமும் வெளிவந்திருக்கின்றது அந்த சரணாகதியினாலேயே எல்லாம் குறையற நிறைவேறப் போகின்றதென்றபடி. இங்கு ஸர்வம் என்றதற்கு மர்மமான பொருளை ச்ருதப்ரகாசிகாபட்டர் ஸ்வாசார்ய ஸந்நிதியில் தாம் கேட்டபடியே விவரித்திருக்கிறார்— * ஸ்வ ஸம்பந்தி ஸம்பந்தி நிஸ்தாரணமபி ஸர்வசப்தாபிப்ரேதம் * என்கிற ஸ்ரீஸூக்தியினால். உமக்கு மாத்திரமேயன்றிக்கே உம்முடைய ஸம்பந்தம் ஸாக்ஷாத்தாகவோ பரம்பரையாகவோ உள்ளவர்களுக்கும் பேறு தப்பாதென்று பெரியபிராட்டியார் அருள்புரிந்ததாக இதனால் ஸ்பஷ்டமாகின்றது.

இப்படி எம்பெருமான் தானும் எம்பெருமானார்க்கு ஒரு வரம் அருள்செய்ததாக வேதாந்த தேசிகன் ந்யாஸதிலகத்தில் * லக்ஷ்மணமுநே பவதா விதீர்ணம். ச்ருத்வா வரம்

தத்நுபக்ரமதாவலிப்தே * என்ற ச்லோகத்தினால் ஸ்பஷ்டமாகவருளிச்செய்தார். மணவாள மாமுனிகள் விம்சதியில் * காலத்ரயேபி கரணத்ரயநிர்மிதாதி பாபக்ரியஸ்ய சரணம் பகவத் க்ஷமைவ, ஸா ச த்வயைவ கமலாரமணே அர்த்திதா யத் க்ஷேமஸ் ஸ ஏவ ஹி யதீந்த்ர! பவச்ச்ரிதாநாம் * என்கிற ச்லோகார்த்தத்தினால் தெளிய வருளிச் செய்தருளினர். ஆகவே எம்பெருமானாருடைய ஸம்பந்தமே கொண்டு நம் போலியர்களும் பேறுதப்பாதென்று துணிந்திருக்க ப்ராப்தியுள்ளதாதலால் * நாங்களும் மார்கழி நீராட * என்றதனால் * பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானான் உன்னுறை பொருள்வகையில் [ஸ்வாபதேசார்த்த மர்யாதையில்] தெரிவித்தது இதுவேயாகும். இதுவேயாயிற்று மார்க்க சீர்ஷாவகாஹநம்.

---

# எம்பெருமானாரும்—திருக்கோட்டியூரும்.

* பஞ்சாசார்யபதாச்ரித: * [ஐந்து ஆசாரியர்களின் திருவடிகளை ஆச்ரயித்தவர்] என்று போற்றப்படுகின்ற ஸ்வாமி யெம்பெருமானார்க்குத் திருக்கோட்டியூர் நம்பிகளும் ஒரு ஆசார்யர் என்பதை உலகமறியும். * கோஷ்டீபூர்ணகுருபதைத்திருசலோ யாம் சச்லதாஸேதிவாந் * [illegible] என்று தொடங்கி பட்டர் அருளிச் செய்தபடியும், குருபரம்பராப்ரபாவம் முதலிய சரித்திர நூல்களில் உள்ளபடியும், ஸ்ரீ வசந பூஷண வியாக்கியானம் மூன்றாவதாயிரப்படி வியாக்கியானம் முதலியவற்றில் மணவாள மாமுனிகள் அருளிச்செய்தபடியும் ஸ்வாமி யெம்பெருமானார் திருக்கோட்டியூர்க்குப் பலகால் நடந்து துவண்டு நிதியான பொருளைப் பெற்றிருந்தார் என்பது விவாதமற்ற விஷயம். அப்படி பெற்ற பொருளை உடனே ஆசார நியமனத்தைக் கடந்தும் அவ்வூரிலேயே பலஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு வாரி யிறைத்துவிட்டு எம்பெருமானாரென்கிற சிறப்புப் பெயர் பெற்றார் என்பதும் தேசமெல்லாம் வழங்கும் இதிஹாஸமாகவுள்ளது. இது நிற்க.

சாஸ்திரங்களில் ஒரு கட்டளையான வசனம் நம்பூருவாசாரியர்களால் ரஹஸ்ய க்ரந்தங்களில் அடிக்கடி கையாளப் பட்டிருக்கக்காண்கிறோம்; அதாவது—

* [illegible]
[illegible] *
* குரும் ப்ரகாசயேத் தீமாந் மந்த்ரம் யத்நேந கோபயேத்,
அப்ரகாச ப்ரகாசாப்யாம் க்ஷீயேதே ஸம்பதாயுஷீ * என்பதாகு.

இதன் பொருள் யென்னென்னில்; விவேகியாயிருக்கும் சிஷ்யன் ஸ்வாசார்யனை நன்றாக வெளியிடக்கடவன்; ஆசார்யன் உபதேசித்த மந்த்ரத்தை மாத்திரம் அப்படி வெளியிடாமல் வெகு யத்னத்தோடு மறைத்து வைத்துக் கொள்ளக்கடவன். இப்படியல்லாமல் வேறு விதமாக நடந்து கொண்டால் பக்ஷத்தில் (அதாவது) ஸ்வாசார்யனை ப்ரகாசப் படுத்தாமலிருக்கை, மந்த்ரத்தை மனம்போனபடி வெளியிட்டுவிடுகை ஆகிய இப்படிப்பட்ட விபரீத காரியங்களைச் செய்யும் பக்ஷத்தில் ஸம்பத்தும் ஆயுளும் குன்றும்—என்பது மேலே யெடுத்துக் காட்டிய ச்லோகத்தின் பொருள். இவ்விரண்டு வகையான குறைகளும் ஸ்வாமி யெம்பெருமானார் பக்கலிலே ஏறிக்கிடப்பதாகச் சங்கிக்க இடமுள்ளது. (1) தமக்கு ஆசாரியர்களாக அமைந்த ஐந்து பெரியார்களில் ஒருவர்க்கும் ஒரு தனியன்கூட ஸ்வாமி ஸாதிக்கவில்லை. தமக்கு நேரே ஆசார்யரல்லாத ஆளவந்தார்க்கே தனியனிட்டிருக்கிறார். ஆகவே * குரும் ப்ரகாசயேத் தீமாந் * என்றதன் கட்டளை நிறைவேற்றப் படவில்லை

இக்கலோ பெறலோ ப்ராப்தியே யில்லாமையால் ஏழையான வடியோங்களை ஸமயவிசேஷத்தில் திருவுள்ளத்தில் கொண்டிருந்து கடாக்ஷித்தருளவேணும்."—என்று.

இப்படி பலகால் வேண்டிக்கொண்டிருந்த ஸ்ரீ வைஷ்ணவர்களின் ச்ரத்தாபக்தி யதிசயங்களைத் திருவுள்ளம்பற்றியிருந்த ஸ்வாமி * பாருலகிலாசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறுமென்று, பேசி வரம்பறுத்தார் பின் * என்று தாமே மற்றொருவதாரத்தில் பேசி வைக்கும்படியான பெருமை பொருந்தியவராதலால், அப்படிப்பட்ட ச்ரத்தாளுக்களான ஸ்ரீ வைஷ்ணவர்களை ஸந்நிதியின் மேல்தளத்திலே ஏகாந்தமாக அழைத்துச்சென்று அவர்களுக்குப் பரமக்ருபையுடன் உபதேசித்தருளினார். இப்படி யல்லாமல், அங்கே, மேல் கோபுரத்தருகே நின்றுகொண்டு வீதியில் போகிறவர்களையெல்லாம் வம்மின் கொள்மின் என்றழைத்து அர்த்தங்களை வாரியிறைத்துவிட்டார் என்று சிலர் நினைப்பதும் சொல்லுவதும் வஸ்துஸ்திதியன்று. அப்படி வாரி யிறைத்திருந்தால் அதனால் யார்க்கும் யாதொருபயனு மில்லை. ஏனென்னில்; * வக்ஷ்யாஸ்ருதாவா வழுஅவக்ராஸ் பத்ரேஷு ...தவைஷவா— * பந்ரேக்ஷிதோ வா வ்யர்த்தஸ் ஸ்யாத் யத்ருச்சாக்ருத ஏவ வா * என்பது ப்ரஸித்தமான சாஸ்த்ரம்; க்ரமப்பட்டு ஆசார்ய ஸந்நிதியில் கிடைக்கப்பெறவேண்டிய மஹார்த்தம் ஏடுபார்த்து ஸங்ரஹிக்கப்பட்டாலும், அபேக்ஷையில்லாதிருக்க யாத்ருச்சிகமாகக் காதில் விழப்பெற்றாலும் அது பயனற்றதே—என்பது மேலே குறித்த வசனத்தின் பொருள். இதனை ஸ்வாமியறிந்திலர் என்பது அஸம்பாவிதம். அர்த்தங்களைத்தும் கருணாதிசயத்தாலே தம்மையுமறந்து வாரி யிறைத்துவிட்டாரென்னில், இப்படிச் சொல்லுகிறவர்கள் இதையொரு மஹாகுணமாக நினைக்கவேண்டுமேயொழிய, குறையாக நினைத்துச் சங்கிக்க இடமில்லை. உண்மையில் அங்ஙனம் நடக்கவில்லை. ச்ரத்தாளுக்களாய்ப் ப்ரார்த்தித்திருந்தவர்களுமான ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கே அருமருந்தாக உபதேசித்தருளப்பட்டது. * மந்த்ரம் யத்நேந கோபயேத் * என்பதற்கு—ஸர்வாத்மனா ஒருவர்க்குமே உபதேசிக்காமல் மூடி மூடியே வைத்துக்கொள்ள வேணும் என்பதாகப் பொருள் என்று நினைப்பது பொருந்தாது. அப்போது உபதேச பரம்பரையே இல்லையாய்விடும். எந்த மந்த்ரமும் யாருக்குமே ப்ராப்தமாகாமலிருக்கவேணும். மற்ற ஆசார்யர்கள் அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யர்கள் என்றும், ஸ்வாமி எம்பெருமானார் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர் என்றும் சொல்வதற்குச் சாலவும் இடமுண்டு. நம்பியின் திருவாணையை மீறி உபதேசித்தார் என்பது உண்டு. அந்தக் குற்றத்தை ஸ்வாமி தாமே யிசைந்து மறுமொழி கூறினது ப்ரஸித்தமாயிருப்பதால் அதில் இப்போது விசாரமொன்றுமில்லை. அநதிகாரிகளுக்கும் வாரி யிறைத்துவிட்டார் என்று கொண்டு கூறும் ஆக்ஷேபத்திற்கே இங்குப் பரிஹாரமுரைக்கப்பட்டது. "மனமுடையீரென்கிற ச்ரத்தையே அமைந்த மர்மஸ்பர்சிக்கு நாளும் நமருமென்னும்படி ஸர்வரும் அதிகாரிகள்" என்கிற ஆசார்யஹ்ருதய ஸ்ரீ ஸூக்தியின்படி அதிகாரிகளான ஸச்சிஷ்ய லக்ஷண பூர்த்தியுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கே ஸ்வாமி உபதேசித்தருளினார் என்கிற பரமார்த்தத்தை நிரூபித்தோமாயினும்.

இனி, * குரும் ப்ரகாசயேத் தீமாந் * என்ற முதற் கட்டளை ஸ்வாமிபக்கலிலே கண்டதில்லையே யென்கிற சங்கைக்குப் பரிஹாரமுரைக்கிறோம். இதற்கு பஹிரங்க ஸமாதான மென்றும் அந்தரங்க ஸமாதானமென்றும் இரண்டுண்டு. இரண்டையும் தெரிவிக்கிறோம். பஹிரங்க ஸமாதானத்தை முன்னே தெரிவிக்கிறோம். * குரும் ப்ரகாசயேத் தீமாந் * என்ற கட்டளையை மற்றையாசிரியர்களெல்லாரும் எவ்விதமாகப் பரிபாலனம் செய்திருக்கிறார்களோ அவ்விதமாகவேதான் எம்பெருமானாரும் பரிபாலனம் செய்திருக்கிறார். ஸ்ரீமத்கூர

முனிகள் முதலான பூர்வாசார்யர்களும் தம்தம் ஆசிரியர்களுக்குத் தனியன் இயற்றியருளுவ திப்பது, காலக்ஷேப ப்ரஸங்கங்களில் அவ்வாசார்யர்களின் பெருமைகளைப் பன்னியுரைப்பது என்ற இவ்விதமாகத் தானே நடந்து கொண்டார்கள். ஸ்வாமியும் அவ்விதமாகவே நடந்து கொண்டார். பெரியநம்பி முதலான தம் ஆசிரியர்களுக்கு இன்றைக்கும் வழங்கிவரும் தனியன்களெல்லாம் ஸ்வாமி பணித்தவையே. தம்முடைய வாழ்நாளில் அவ்வாசிரியர்களின் பெருமைகளை "போற்றியுகப்பதும் புந்தியிற் கொள்வதும் பொங்குபுகழ் சாற்றிவளர்ப் பதும்" செய்துகொண்டே யிருந்தாரென்பதில் என்ன ஸந்தேஹம்? வேறு எவ்விதமாக குருப்ரகாசகம் பண்ணுவது? பண்ணத்தகுந்த முறையில் பண்ணியேயிருக்கிறார்—என்கிறவிது பஹிரங்க ஸமாதானம். எல்லாரும் சொல்லிப்போருகின்ற ஸமாதானம் இதுவே.

இனி அந்தரங்க ஸமாதானமாவது, கேண்மின். ஸ்வாமி தமக்கு ஸாக்ஷாத் ஆசார்யர்களான ஐவர்களில் ஒருவர்க்கும் தாம் தனியன் இடவில்லை, அந்தத் தனியன்களெல்லாம் வேறு சிலர் இட்டவையே என்றே வைத்துக்கொள்வோம். ஆளவந்தார் விஷயமாக ஸ்வாமி தனியனிட்டிருக்கிறாரென்பதில் ஸந்தேஹமோ விவாதமோ இல்லையே. *யத்பதாம்போருஹ த்யாந வித்வஸ்தாசேஷ கல்மஷ:, வஸ்துதாம் உபயாதோஹம் யாமுநேயம் நமாமி தம். * என்கிற இந்தத் தனியன் கீதாபாஷ்யத்தின் தொடக்கத்தில் இருப்பதால் இது ஸ்வாமியின் ரசனையே யென்பது நிர்விவாதம். ஆளவந்தாருடைய திருவடிகளிரண்டை மாத்திரம் சிந்திப்பதாக இங்குக் கூறுகின்றதன்று. இங்குள்ள *பதாம்போருஹபதத்தினால் பதினான்கு திருவடிகள் உத்தேசிக்கப்படுகின்றன. அவை எவையென்னில்; ஆளவந்தாருடைய இரண்டு திருவடிகள் தெரிந்தேயிருக்கின்றன. அவர் ஆச்ரித்த இரண்டு திருவடிகள் (நம்மாழ்வாருடைய திருவடிகள்;) ஆக நான்கு. அவ்வாளவந்தாருடைய திருவடிகளை ஆச்ரயித்திருந்து நமக்கு ஆசாரியர்களான ஐவருடைய திருவடிகள் பத்து; ஆக இப்பதினான்கு திருவடிகளைச் சிந்திப்பதாகத் தெரிவிப்பது இந்த ச்லோகம். விவரித்துக் காட்டுகிறோம், காண்மின்.

யஸ்ய பதாம்போருஹே—யத்பதாம்போருஹே; என்று ஸமாஸம். (ஸம்பந்த ஸாமாந்யே ஷஷ்டீ என்று அறிக.) ஆளவந்தாருடைய திருமேனியிலுள்ள பாதாரவிந்தங்களைச் சொன்னபடி. மறுபடியும் 'யஸ்ய பதாம்போருஹே' என்றும்—ஆளவந்தார் தாம் "மாதா பிதா யுவதய:" என்கிற ச்லோகத்தில் "ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம் ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா" என்று தம்முடைய சென்னிக்கு அணியாகப் பரிக்ரஹித்த நம்மாழ்வாருடைய உபயபாதங்களும் யத்பதாம்போருஹ சப்தத்தினாலேயே எளிதாகத் தெரிவிக்கப்படும். மீண்டும் 'யஸ்ய பதாம்போருஹாணி யத்பதாம்போருஹாணி' என்று கொள்க. உலகில் சிஷ்யர்களைத் திருவடிகளென்றே ஸம்ப்ரதாயஜ்ஞர்கள் வழங்குவதாதலால் ஆளவந்தாருடைய ஐந்து சிஷ்யர்களையே ஆளவந்தாருடைய திருவடிகளாகச் சொன்னபடி. 'பதாம்போருஹ' என்பதில் இரண்டுபதங்கள் உள்ளனவன்றோ; (பத- என்றும், அம்போருஹ என்றும்.) திருவடிக்கு வாசகமான பத சப்தத்தினால் அவருடைய சிஷ்யர்களைச் சொல்லி, தாமரைக்கு வாசகமான அம்போருஹ சப்தத்தினால் அவர்களுடைய திருவடிகளைச் சொல்லுகிற தென்றும் கொள்ளலாம். அம்போருஹமென்றால் திருவடிகளைச் சொல்லுமோவென்னில்; *தாள் வையங்கொண்ட தடந் தாமரைகட்கே* (திருவாய்மொழி. 6—9—9.) என்கிற ஆழ்வார் ப்ரயோகத்தை பார்த்தவர்கள் இதில் விப்ரதிபத்தி பண்ணமாட்டார்கள். "தாள் வையங்கொண்ட தடந்தாளினை" என்னவேண்டுமிடத்தில் திருவடிக்குப் பர்யாயமாகத் தாமரையையே சொல்லியிருப்பது காண்க. இந்த நடை வடமொழியிலுமுண்டு; அபஹ்நுதியலங்காரமென்பர்கள்.

ஆக, பரமாசார்யரான நம்மாழ்வாரையும் ப்ராசார்யரான ஆளவந்தாரையும் ஸ்வாசார்யர்களையும் ப்ரகாசப்படுத்தியே தனியனிட்டிருக்குமழகு ஸஹ்ருதயைக ஹ்ருதயங்கமம். "குரும் ப்ரகாசயேத் சிஷ்ய:" என்னுமல் "குரும் ப்ரகாசயேத் தீமாந்" என்று மூல ப்ரமாணத்தில் இருக்கையாலே மஹாமேதாவிகள் எவ்விதமாக ஆசார்ய ப்ரகாசகம் பண்ணவாமோ அவ்விதமாகவே ஸ்வாமி தாமும் தம்முடைய மேதாவைபவம் விளங்க இங்ஙனே ச்லோகாத்தம் தொடுத்திருப்பது மிகவற்புதம். மஹான்களுடைய நிருகாவின் விது இங்ஙனேயன்றோ இருப்பது. இதுதான் அக்ஷராங்க ஸந்தான மென்பது.

இப்படி ஸூக்ஷ்மமாகத் தெரிந்துகொள்ள வேண்டும்படி எதுக்கு ச்லோகமியற்ற வேணும்? எல்லாரும் ஸுஸ்பஷ்டமாகவே நன்கு தெரிந்து கொள்ளும்படி இயற்றலாகாதோ வென்று கேட்பவர்கள் யாவர்க்கும் அப்படியே கேட்டுக்கொண்டிருக்கலாம். அன்னவர்கள், முக்குறு முன்னம் வெளியிட்ட பஹிரங்கமாதாரத்தைக்கொண்டு திருப்திபெறுக.

* யத்பதாம்போருஹத்யாநவென்ற மேற்குறித்த தனியனில் மற்றொரு விசேஷமும் ஸூக்ஷ்மமாக உய்த்துணரத் தக்கதுண்டு; அதாவது—[பதாம்போருஹ] என்று ஐந்து எழுத்துக்களையிட்டு ஆளவந்தார்திருவடிகளை நிர்தேசித்திருப்பதானது ஆளவந்தாருடைய ஐந்து திருவடிகள் [அதாவது, ஐந்து சிஷ்யர்கள்] தம்முடைய சிந்தனைக்கு இலக்கானவர்களென்றும் தெரிவிக்கப்பட்டதாகிறது. அதனினும் முதலிலே பகாரத்தையிட்டிருப்பதானது அந்த ஐந்து ஆசாரியர்களுள் தலைமையாசிரியரே தமக்குத் தலைவரான ஆசார்யராக வாய்த்தார் என்பதற்கு ஸூசகமாகிறது. எங்ஙனே யென்னில்; ஸ்வாமிக்குத் தலைமையாசிரியர் பெரியநம்பி; அவருடைய திருநாமதேயம் பராங்குசதாஸர் என்பது. வாக்ய குருபரம்பரையில் "ஸ்ரீமதே ராமாநுஜாய நம:, ஸ்ரீமத்யாமுநமுநயே நம:" என்ற வாக்யங்களுக்கிடையில் "ஸ்ரீபராங்குச தாஸாய நம:" என்றிருப்பது கொண்டும் பெரியநம்பிக்குத் திருநாமம் பராங்குச தாஸ ரென்பதே யென்றறியலாம். பதாம்போருஹ என்றதில் முதலிலுள்ள பகாரம் பராங்குச தாஸரான தம் முதலாசிரியரை ப்ரத்யபிஜ்ஞாபநம் பண்ணவல்லது என்றுணர்க. இதற்குமேல் ஒன்று கேட்கக்கூடும்; முதலெழுத்தினால் பெரியநம்பி ஸூசிதராகிறா ரென்னில், மற்றை நான்கெழுத்துக்களினாலும் நான்கு ஆசார்யர்கள் ஸூசிதர்களாகிறபடியையும் காட்டவேண்டாவோ? என்று. கேண்மின்; தலைவரான ஆசிரியரைக் காட்டுமளவே போதுமானது. எல்லாவாசிரியரையும் இங்ஙனே காட்டியாகவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. மஹாவித்வான்களான சதுரர்கள் இன்னமும் உட்புகுந்து ஆராய்ந்து பார்த்தால் அந்த வழியும் புலப்படக்கூடும். ... ... ... *

---

# "ஆத்மதா பலதா:."

நம் பூர்வாசார்யர்கள் திவ்யப்ரபந்த வ்யாக்யானம் முதலிய ஸம்ப்ரதாயக்ரந்தங்களில் ச்ருதிஸ்ம்ருதிஇதிஹாஸ புராண பாஞ்சராத்ரங்கள் முதலான பல பல ப்ரமாணங்களையும் உதாஹரித்தருளியுள்ளார்களென்பது யாவருமறிந்ததே. அந்த ப்ரமாணங்களில் சிலவற்றை கற்றுணர்ந்த பெரியோர்களுங்கூட முறைகேடாக அச்சிட்டுவிட்டபடியால் அவற்றைப் பின்புள்ள வித்வான்களும் விசேஷவிமர்சயின்றிக்கே அந்த அச்சுப்பிழைகளை அகற்றாமல் அப்படியே அநுஸந்தானம் செய்துவருவது ஒரு ரூடியாக ஆய்விட்டது. *அர்ச்சாவதாரோபாதாநவைஷ்ணவோத்பத்தி சிந்தநம், மாத்ருயோநிபரீக்ஷாயாஸ் துல்யமாஹுர் மநீஷிண:* என்கிற ப்ரமாண வசனத்தை ஸ்ரீ வசநபூஷண வ்யாக்யானத்திலில் "அர்ச்சாவதாரோபாதாநம்" என்று தனிப்பதமாகப் பிரித்து யதோசிதம் அச்சிட்டு விட்டார்கள்; அப்படித்

